# ஒட்டக சவாரி

முதலில் அது கண்ணில் பட்டது ஒரு நிழலுருவமாகத் தான். ஜுஹு-வில்லேபார்லே பகுதியையும் வர்ஸோவையும் இணைக்கும் லிங்க் ரோட் என்று அழைக்கப்பட்ட தெருவில். ஒரு பின்னிரவு நேரத்தில். வெறும் பணம் முதலீடு செய்வதற்கென்றே எழுப்பப்பட்ட, யாரும் குடிவராத பிரம்மாண்டக் கட்டடங்கள், சில வெற்று மனைகளை ஒட்டி எழுப்பப்பட்டக் குடிசைகள், அரைகுறை வீடுகள், கார் பட்டறைகள், காட்டுச் செடிகள் மண்டிய, கட்டணம் இல்லாக் கழிப்பிடங்கள், இவை சூழ்ந்த செப்பனிடப்படாத தெரு அது. மங்கலாக எரியும் தெரு விளக்குகள். பின்னிரவு நேரங்களிலும், விடிகாலை சமயங்களிலும் கவனமாக இராவிட்டால், இயற்கை உபாதைகளைத் தீர்க்க, ஒரு குவளையுடன் தெரு ஓரத்தில் அமர்ந்திருக்கும் யார் மீதாவது மோத நேரிடலாம். பலமுறை நேரிட்டிருக்கிறது. வேகமாகத் திரும்பிய மாருதி கார் ஒன்று ஒரு சிறு பையனை மோதிவிட்டுச் சென்றது ஒருமுறை. மல்லாந்து விழுந்த பையன் கையில் இந்தியச் சந்தை தாராளமயமாக்கப்பட்டதின் சின்னமாய் ஒரு புது மாதிரி பிளாஸ்டிக் குவளையும், அவன் அணிந்த சட்டையில் ஒரு கையால் விளக்கை உயரே பிடித்த அமெரிக்க நாட்டுச் சுதந்திர தேவியின் படமும் இருந்தன. அவன் குண்டியில் பீ ஒட்டிக்கொண்டிருந்தது.

லிங்க் தெருவில் நுழைந்தவுடன் இதெல்லாம் நினைவுக்கு வரும். வாகனத்தின் வேகம் மட்டுப்படும். அதைப் பார்த்த அந்த இரவிலும், வீடு திரும்ப நேரமாகிவிட்டது என்றாலும், தெருவில் நுழைந்ததும் கைனடிக் ஹோண்டாவின் வேகத்தைக் குறைத்தாகிவிட்டது. அதன் பின்பு, நடுவில் வரிசையாக நின்ற உயர் கம்ப விளக்குகளுடன் நீண்டு கிடந்த தெருவில் பார்வையை ஓட்டியபோதுதான் அது தூரத்தே தெருவின் ஒரு முனையிலிருந்து இன்னொரு முனையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது. அதிகப்படியாக நீண்ட கால்களும், கழுத்தும், கோணாமாணாவென்று இசைவு இல்லாமல் அசைய, தீட்டிக் கலைத்த கோட்டுச் சித்திரம் போல், கடற்கரையை ஒட்டிய வெற்று மனைப் பகுதியிலிருந்து திடீரென்று பிரவேசித்துத் தெருவைக்

கடக்க ஆரம்பித்தது. வண்டி அதனருகே வந்தபோது, தெரு விளக்கின் ஒளி அதன் மேல் விழும் இடத்தில் நின்றுகொண்டிருந்தது. நீண்ட கழுத்தின் மேலே இருந்த தலையை அது மெள்ளத் திருப்பியபோது இருபுறமும் அறுபட்ட, ரத்தம் உறைந்து கறுத்த அதன் மூக்கு தெரிந்தது. ஜுஹு கடற்கரையில் குழந்தைகளையும் பெரியவர் களையும் உல்லாச சவாரி ஏற்றிக்கொண்டு போகும் ஒட்டகங்களில் ஒன்றாக இருக்க வேண்டும். கடற்கரையில் ஓடவிடப்படும் ஒட்டகங் கள். தடித்த கயிறு மூக்கினுள் நுழைக்கப்பட்டு இழுபடும் ஒட்டகங்கள். கயிறு படப்படப் புண்ணாகிப் பின் மூக்கு அறுபடும் ஒட்டகங்கள். விநாயக சதுர்த்தியின் போது, பிள்ளையாரைத் கடலில் போடும் 'விஸர்ஜன்' வைபவத்தன்று, பட்டுத் துணிகள் முதுகில் விரிக்கப்பட்டு, தங்க முலாம் பூசிய கவசங்கள் முகத்தை மறைக்க, ஆரஞ்சு வண்ணக் கொடிகளை உயர்த்தியபடிக் கோஷமிடும் பக்தர்களை முதுகில் தாங்கியபடி, சினிமாப் பாடல்களின் அலறல், லாரி, கார், பஸ்களின் ஓசைகளுக்கு நடுவே, பல வடிவப் பிள்ளையார்கள் பின்னே வர, ஊர்வலத்தின் முன்னால் நகர்வலம் செல்லும் ஒட்டகங்கள்.

அலைகள்போல் உயர்ந்தெழும்பும் மணல் பரவிய, எல்லையே காண முடியாதபடி விரிந்திருக்கும் பாலைவனத்தில், கால்களை ஊன்றி நிதானமாக, அல்லது மணலை உதைத்தபடி வேகமாக, நீண்ட பயணங்களுக்குத் தயாராயுள்ள ஒட்டகங்கள். வறண்ட மணலில் காலூன்றி அமர்ந்து, ஆழ்ந்த பச்சை, நீலம் அல்லது மஞ்சள் வண்ணங்களில் தலைப்பாகை கட்டிக்கொண்டு வரும் எஜமானனை முதுகில் ஏற்றிச் சுமக்கும் ஒட்டகங்கள். சில சமயம் அரக்கு, பழுத்த சிவப்பு அல்லது ரோஜா வண்ணங்களில் தங்கப் பொட்டுகள் தைத்த பாவாடையும், முதுகுப்புறம் திறந்து, முன்னால் மட்டும் மறைக்கும் ரவிக்கையும், சரிகை தைத்த முக்காடும் அணிந்த அவன் புது மனைவியை, அல்லது சில மாலை வேளைகளில், சூரிய கிர ணங்களின் ஒளி அதீதமாகத் தாக்கியதால் செம்பட்டைக் கூந்தலையு டைய, ஒட்டகப் பால் குடித்து வளரும் குழந்தைகளை, சாவதானமாக ஏற்றிக்கொண்டு எந்த நிர்ப்பந்தமும் இல்லாமல் மணலில் கால் புதைய நடக்கும் ஒட்டகங்கள். ஒரு ராம்சிங்கோ, லகன்சிங்கோ பம்பாயில் பிழைப்பதற்காக இட்டு வரும் ஒட்டகங்கள். மூன்று, நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு, அவை தளர்ந்து போனபின் துரத்திவிடப் படும். திடீரென்று தார்த் தெருக்களில் இலக்கின்றி நடக்க ஆரம் பிக்கும். நீண்ட பயணம் மேற்கொள்ளப்போவதுபோல் நடந்தவாறே இருக்கும். லாரி மோதியோ, பட்டினியாலோ இறக்கும்.

வறண்ட பெருத்த கண்களும், அறுபட்ட மூக்கும் அதன் அடிப் பகுதியில் உறைந்த ரத்தமுமாய், தெரு விளக்கின் ஒளி அதன் மேல் பட அது நின்றுகொண்டு அவளைப் பார்ப்பதுபோல் பட்டது. கடற் கரை மணலில் உலவ மறுத்து, முரண்டு பிடித்த சண்டி ஒட்டகமோ இது? தன் காமத்தைத் தைரியமாக வெளிப்படுத்தியதால் ஒரு காவிய நாயகனால் மூக்கறுபட்ட சூர்ப்பனகைபோல் நின்றுகொண்டிருந்தது.

துளை போடவும், கயிறு மாட்டவும் எவ்வளவு வாகான அங்கம் மூக்கு! ஒரு வாய்வழிக் கதை சொல்வார்களே, அதுபோல. ஒரு கானகத்தில், சுதந்திரமாக, யாருக்கும் கட்டுப்படாமல் ஒருத்தி ஆனந்தமாக அலைந்துகொண்டிருந்தாள். அதன்பின் ஒருவன் – கதை சொல்லும் போது அவனை மாவீரன், மகா பராக்கிரமசாலி என்று வர்ணிப்பார்கள் – ஒரு வளையத்தை அவள் மூக்கில் மாட்டி, அவளை அடக்கி இழுத்து வந்தான். சிறிது காலம் சென்றபின் அவள் அந்த வளையத்தையே நகையாக அணிந்து கொண்டாள். தெருவின் ஏற்ற இறக்கங்கள், குழிகள் இவற்றைச் சமாளித்தவாறே மெதுவாக அதைக் கடந்தபின் அவளின் ஒரு கை மேலெழும்பி, விரல்கள் அவள் மூக்கை நெருடின. ஒரே ஒரு விநாடி. அவளுக்கும் ஒரு மூக்குத்தி இருந்தது. வைரக் கற்கள் பதித்த எட்டுக்கல் பேசரி. சிங்கப்பூரில் பிறந்து வளர்ந்த பிறகு அவளுக்குத் தமிழ்நாட்டு மாப்பிள்ளையை அப்பா தேடி நிச்சயித்தபோது, கல்யாணத்திற்கு ஒரு வாரம் முன்னால் மூக்கிற்கு வைரத்தில் ஏதாவது செய்துபோட வேண்டும் என்ற வேண்டுகோள்போல் வந்த மிரட்டலுக்குப்பின் அவசரமாகச் செய்தது. "மூக்கிற்கு என்றுதானே அப்பா சொல்கிறார்கள்? பேசாமல் அவர் மூக்கிற்கே செய்துவிடுங்கள்" என்று இவள் சொன்னதும் அப்பா முறைத்தார். தமிழ் நாட்டில் அவளுக்கு முதலில் ஏற்பட்ட ஊசிக்குத்து மூக்கில்தான். கறுத்த அழகான மூக்கில் வைரம் எப்படி ஒளிர்கிறது பார் என்றார்கள்.

அதைப் பார்த்தபின் ஜீவகாருண்ய சங்கத்துக்குப் பல முறை தொலைபேசியில் தகவல் சொல்லியாகிவிட்டது அதைக் காப்பாற்றும்படி. அதன்பின் அது கண்களில் படவில்லை. திடீரென்று ஒரு நாள் அந்திவேளையில் அதை எதிர்கொள்ள நேர்ந்தது. தெருவில் நுழைந்ததும் கூட்டம் கண்ணில் பட்டது. வண்டியை நிறுத்தி எட்டிப் பார்த்தபோது புதர்ச் செடிகளுக்கு இடையே அது உட்கார்ந்திருந்தது. அதன் தோல் எல்லாம் சுருங்கி, கருமை ஏறி உரித்து எடுத்துவிடலாம் போல, எலும்பில் ஒட்டாமல் தொங்கியது. உடலுக்குள் என்ன வேதனையோ சில வினாடிகளுக்கு ஒரு முறை உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு அகோரமாகக் கனைத்தது. நெருப்பணைக்கும் படையினருக்கும், ஜீவகாருண்ய சங்கத்துக்கும் தொலைபேசியில் தகவல் அனுப்பியாகிவிட்டது என்று சிலர் பேசிக்கொண்டார்கள். ஒரு பக்கெட்டில் தண்ணீரை அதன்முன் வைத்தும் அது குடிக்க மறுத்தது. பேரீச்சம் பழங்களை வாயருகில் கொண்டு போனபோது தீனமாக ஓர் ஒலியை எழுப்பியது. அவள் கூட்டத்தில் உள்ளவர்களில் தெரிந்த முகங்கள் உள்ளனவா என்று பார்க்க முற்பட்டபோது, சற்றுத் தூரத்தே யமுனா வருவது தெரிந்தது.

நான்கு தெருக்கள் பிரியும் தெரு முனைகளில் போக்குவரத்து அடையாள விளக்குகள் எரியும் இடத்தில் வாகனங்கள் பச்சை விளக்குக்காகக் காத்திருக்கும்போது சொத்துசொத்தென்று கையைத் தட்டிக்கொண்டு வரும் அலிகளில் ஒருத்தி யமுனா. அவர்கள் காருக்குள் கையை விட்டுக் குழந்தைகளை ஆசீர்வதிப்பார்கள். தனி

யாகப் போகும் ஆண் ஓட்டுநரின் கன்னத்தை நிமிண்டிக் கண்ணடிப்பார்கள். பணம் கொடுக்காவிட்டால் சாபமிட்டு, அலிகளின் சாபம் பலிக்கும் என்று பயமுறுத்துவார்கள். கல்யாணம் ஆகும், குழந்தை பிறக்கும், குடும்பம் தழைக்கும் என்று ஆசீர்வதிப்பார்கள். இவள் ஒரு முறை சிவப்பு விளக்கு மாற வண்டியை நிறுத்தியபோது, பக்கத்தில் சொத்துசொத்தென்று கையடி கேட்டது. திரும்பாமலேயே மராட்டியில், பணம் தரமுடியாமைக்கு மன்னிக்கும்படிக் கேட்டுக் கொண்டாள் பம்பாய் வழக்கப்படி.

"யக்கா, என்னயக்கா இப்படிச் சொல்லுறியே?" என்ற குரல் கேட்டதும் திரும்பிப் பார்த்தாள்.

"தமிழா நீ?"

"ஆமாயக்கா . . . யமுனான்னு பேரு. காசு குடேன் ராசாத்தி."

"எந்த ஊரு நீ?"

"ஏதோ ஒரு ஊருக்கா. இங்க வந்து லோல் படறேன். எட்டணா தாயேன்."

"வேலை பண்ணக் கூடாதா?"

"வேலை பண்ணறோம் யக்கா. பாய் பின்னுறோம். மூங்கில் நாற்காலி, கூடை முடையறோம். போறலியே."

ஐந்து ரூபாய் தந்ததும் நெற்றியை வழித்து விரல்களைச் சொடக்கினாள்.

ஒரு நாள் மாலை இவளை நிறுத்தி வண்டியை ஓரம் கட்ட வைத்தாள். சோளக் கொண்டைகளை நெருப்பில் வாட்டிக்கொண்டிருந்த பையனின் கன்னத்தில் இடித்து, "இந்தாய்யா ஆறுமுகம், எனக்கும் எங்கக்காவுக்கும் நல்லதா ரெண்டு எடுத்து வாட்டித்தா" என்றாள்.

"யமுனா, என்ன இது? நான் காசு தரேன்" என்றதும், அந்தப் பையன் தடுத்து, "வேணாங்க. இது எங்க ஊருதான். அதும் வீட்டுல எல்லாரும் எங்களுக்குப் பழக்கம்தான். தறி போடுற குடும்பம்" என்றான். சோளத்தை நெருப்பில் வாட்ட ஆரம்பித்தான்.

"ஆமாக்கா. சின்னப் புள்ளயில நாங்கூட நெஞ்சிருக்கேன். எங்க அப்பாருகூட. ஒரு வாட்டி ஸ்பெஸல் ஆர்டர் வந்து ஒரு புடவையும், பாவாடைத் துணியும் நெஞ்சோம். நாந்தான் பாவாடை நெஞ்சேன். இப்பக்கூட நெனப்பிருக்கு. கிளிப்பச்சையில கருநீலக் கலர்ல கரை வெச்சது. சாதாரணமா கிளிப்பச்சைக்குக் குங்குமச் செவப்புக் கரைதான். ஆனா எங்கப்பாரு நெய்யறதே தனிதான். மாங்கா புட்டா சரிகையில கோக்கலாமின்னிட்டு நான் சொன்னப்போ நச்சத்திரம் கோருன்னாரு. கருநீலத்துக்கு அதான் எடுப்பா இருக்குமின்னாரு . . ."

ஆறுமுகம் சோளக் கொண்டைகளை வாட்டி எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து தடவி, உப்பு மிளகாய்த்தூள் தூவித் தந்தான். சாப்பிட்டு முடித்ததும், "கிளம்புக்கா. நேரமாயிடும்" என்று வண்டியில் உட்கார

வைத்து வழியனுப்பினாள். இவள் வண்டியை கிளப்பியதும், சொத்து சொத்தென்று கை தட்டியபடி போய்விட்டாள்.

அதன்பின் எப்போதாவது கணநேரச் சந்திப்புகள். குசல விசாரிப்பு கள். வாகனத்தில் விரையும்போது "யக்கா, தமிழ்க்கார யக்கா" என்று தெருவின் ஒரு பக்கத்திலிருந்து குரல் எழும். திரும்பிப்பார்த் தால் யமுனா உற்சாகமாகக் கையை அசைத்துக்கொண்டிருப்பாள்.

கால்களை அகட்டி அகட்டி வைத்து நடந்தபடி வந்துகொண்டிருந் தாள் யமுனா. கூட்டத்தைப் பார்த்ததும் நின்று ஒட்டகத்தைப் பார்த்தாள். "யம்மா" என்றாள். இவள் வண்டியைப் பார்த்ததும், இவளைத் தேடி, இவளைப் பார்த்ததும், "இந்தக் கோராமையைப் பாருக்கா" என்றாள்.

அடுத்த விநாடி மழைத் துளிகள் சொட்ட ஆரம்பித்தன. மழைத் துளிகள் உடலில் பட்டதும் ஒட்டகம் உடலைச் சிலிர்த்துக்கொண்டது. ஒரு பெருந்துளி அதன் மூக்கில் விழுந்து வாய்ப்புறம் வழிந்தது. கேவுவதுபோல் ஓர் ஒலியை எழுப்பிவிட்டுப் பொத்தென்று ஒருபுறம் சாய்ந்தது ஒட்டகம். கால்களால் மலமும் குப்பையும் கிடந்த தரையை உதைத்தது ஒரு முறை. கண்களை முழுவதும் திறந்து, அண்ணாந்து வானைப் பார்த்துப் பின்பு மெல்ல மூடிக்கொண்டது. உடம்பு ஒரு பெரும் சிலிர்ப்புக்குப் பின் அடங்கியது.

"போய்விட்டது", "பாவம்" என்று கூறியபடி கூட்டத்தினர் நகர ஆரம்பித்தனர்.

"எங்கயிருந்தோ இங்க கூட்டிட்டு வந்திட்டுக் கொன்னு போட்டிட் டீங்களேடா கம்மனாட்டிப் பயலுவளா . . ." என்று அலிகளுக்குரிய கரகரத்த குரலில், சொற்களை நீட்டிநீட்டி உச்சரித்து ஒப்பாரி வைப்பதுபோல் ஓலமிட்டாள் யமுனா. பெருந்துளிகளாகப் பொழிய ஆரம்பித்திருந்த மழை, நடைபாதையில் பிளாஸ்டிக் விரிப்புகளாலான கூரையுடன் கூடிய புரைகளுக்குள்ளே இரவு உணவுக்கான மசாலா கல்லில் அரைபடும் ஓசை, பூண்டு, வெங்காயம், மல்லி, மிளகாய் எல்லாம் மசிந்த மணம், வாகனங்கள் விரையும் ஓசை, சற்று தூரத்தே உயரப் பொங்கிப் பாறைகளில் வேகத்துடன் மோதிய கடல் அலைகளின் ஆரவாரம் எல்லாவற்றையும் மீறித் துளைத்தபடிக் கிளம்பிய அந்த ஓலம், வானத்தில் திரண்டிருந்த கருமேகங்களிடம் 'இந்தச் சேதியைச் செல்லுமிடமெல்லாம் பறைசாற்றுங்கள்' என்று முறையிடுவதுபோல், மெல்ல மெல்ல மேலெழும்பிக் காற்றில் கலந்துபோனது.

**'சதங்கை', ஜூலை - செப்டம்பர் 1995**